

திருநெல்லை
ஆன்மீகத் திங்களிதழ்
விளம்பி – பங்குனி – 2019 – மார்ச்
திருக்களர் ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளி ஆண்டு விழா
81

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - பங்குனி - 2019 - மார்ச் இதழ் - 81

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




இடப்பங்கில் உமைஇருக்க இடையிலொரு மகனிருக்க

எம்மிதயம் தானிருந்தே என்றும் காக்கும்

இயல்புடைய பெருமானுக் கேற்ற நங்காய்!

மடப்பிடியே! திருநெல்லை என்கின்ற மயிலே! உன்

மனமிருக்கும் அடியவரில் நானும் உள்ளேன்

மாமுனிவர் வந்துதொழக் கோவி லூராம்

இடத்தமர்ந்த ஏந்திழையே! எங்கள்குடி காப்பவளே!

இறைமறவா ஆண்டவரும் தினம்வ ணங்க

இருக்கின்ற ஆலயத்தில் இருக்கும் தாயே!

படத்தலைய நாகத்தில் படுத்திருப்பான் பின்பிறந்த

பாவையுமை நீயென்று பார்ப்போர் கூடிப்

பணிந்திடவே அருள்புரிவாய்! பணிய லாமே!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

ஈதல் இசைபட வாழ்தல் எனும் வள்ளுவர் வாக்குக்கு இணங்கத் தன்னால் இயன்ற தானமும், தர்மமும் செய்வது ஒவ்வொரு மனிதப் பிறவியின் கடமை ஆகும். தன்னைச் சுற்றியுள்ள ஜீவன்களைப் பார்த்து ஜீவகாருண்யத் தோடும், மனிதாபிமனத்தோடும் பிற உயிர்களுக்கு வேண்டிய உதவிகளைத் தக்க நேரத்தில் செய்வது என்பது மனிதர்களின் இன்றியமையாத பண்பாகும்.

**பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயன்உடை யான்கண் படின்**

என்ற வள்ளுவரின் வாக்குக்கு இணங்கத் தன்னிடமுள்ள தேவைக்கு அதிகமான செல்வத்தை வேண்டியவர்களோடு பகிர்ந்து கொள்வது என்பது தலைசிறந்த பண்பாகும். நவீன காலத்தில் விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக உறுப்புமாற்று அறுவை சிகிச்சைகள் செய்வது ஒரு மனிதனுடைய ஆயுளை நீட்டிக்க முடியும் என்பது மிகச் சிறந்த உயர்வான அறிவியல் கண்டுபிடிப்பாகும்.

இருதயம், கண், சிறுநீரகம், நுரையீரல், முழங்கால் மூட்டு, ஆகியவற்றைச் செயலிழந்த உறுப்புகளுக்குப் பதிலாகவோ, செயற்கை அங்கங்களினாலோ சரி செய்து ஆயுளை நீட்டிக்க முடியும் என்கிறபொழுது இரத்த தானம், கண்தானம், இருதய தானம் போன்ற உடல் உறுப்பு தானங்கள் மிக உயர்ந்த உயிர் காக்கும் தர்மங்களாகவும், சேவைகளாகவும் கருதப்படக் கூடியவை.

பொதுவாக உறுப்பு தானங்கள் பற்றிய விழிப்புணர்வு சமுகத்திலே அதிகம் இல்லாத காரணத்தினால் உறவினர்கள் இறந்த உயிரின் உடல் உறுப்புகளைத் தானம் செய்வதற்கு மிகவும் அஞ்சுகிறார்கள். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக விழிப்புணர்வு ஏற்பட்டு ரத்த தானம் அதிகமாக நடைபெறுகிறது. நம் கல்லூரிகளில் ஆண்டுதோறும் 200 மாணவர்கள் ரத்ததானம் செய்கின்றார்கள். அடுத்ததாக, கண் தானம் இப்பொழுது பரவலாக நடைபெறுகிறது. இறந்தவர்களின் கண்களைக் குறிப்பிட்ட நேரத்திற்குள் அகற்றி மற்றவர்களுக்கு அதிகபட்சம் இரண்டு பேருக்குப் பார்வையை அளிக்க முடியும். மற்றைய உறுப்புக்கள் உயிர்

பிரிந்தவுடனேயே அகற்றிக் குறிப்பிட்ட காலத்திற்குள் அதனை அறுவை சிகிச்சை மூலம் மற்ற உயிர்க்குப் பொருத்த முடியும் (இருதயம், நுரையீரல், கண் போன்றவை). சிறுநீரகம் ஒரு மனிதனுக்கு 2 உள்ளன. அவற்றில் ஒன்றைத் தானமாகத் தருவதினால் மீதமுள்ள ஒரு சிறுநீரகத்துடன் வாழ்க்கையில் எந்தக் குறையும் இல்லாமல் ஆயுள்காலம் வரை வாழலாம். சில சமயங்களில் உறவினர்களுக்கிடையே சிறுநீரக தானம் நடைபெறுகிறது. இது பாராட்டுக்குரிய ஒன்று.

நாம் டெல்லியில் வேலை பார்த்த சமயத்தில் நம்முடைய வாடகை வீட்டின் உரிமையாளர் கண்தானம் செய்வதற்கு ஒப்புதல் அளித்திருந்தார். அவர் இறக்கும் முன்னரே மருத்துவர்களுக்கு அறிவித்து அவர் இறந்த 20 நிமிடங்களுக்குள் இரு கண்களையும் அறுவை சிகிச்சை மூலம் அகற்றிப் பத்திரப்படுத்தி எடுத்துச் சென்றனர். இதனை நாம் நேரில் பார்த்தோம். அப்பொழுது தான் இறந்து குறிப்பிட்ட நேரத்துக்குள்ளாகக் கண்களை அகற்றி மற்றவருக்குப் பயன்படுத்த முடியும் என்பதைக் கண்கூடாகத் தெரிந்து கொண்டோம்.

சமீபத்தில் நமக்கு நிலவியல் GEOLOGY கற்பித்த பேராசிரியர் திரு.வி.ராமசாமி அவர்கள் அவர்களுடைய உடல் உறுப்புகளையும் தானம் செய்து உடலையும் மருத்துவக் கல்லூரிக்கு அளித்தார்கள் என்ற செய்தி அறிந்து மிக்க மகிழ்ச்சியில் நெகிழ்ந்தோம். இத்தகைய அற்புத தானங்களைச் செய்கின்ற அழகிய திருவுள்ளம் கொண்ட பேராசிரியர் திரு.ராமசாமி போன்றவர்களுக்கு நம்முடைய மனமார்ந்த பாராட்டுக்கள். அவருடைய பெருந்தன்மைக்கும் அவருடைய குடும்பத்தார்களின் பெருந்தன்மைக்கும் எல்லா நலமும் வளமும் பெறப் பரம்பொருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

**23.02.2019 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில்**

**புலவர் அரு. சுந்தரம்**

**கடலாடு காதை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.**

# பகவத் கீதை

## (காப்பியக் கவிஞர் நா. மீனவன்)

*முன்னுரை :*

வேதம் என்றால் என்ன? இதற்கு நாம் விளக்கம் பெற வேண்டும். வித் என்ற சொல்லில் இருந்து வேதம் என்ற தொடர் வந்தது. வேதம் – அந்தம் என்று பிரித்துப் பொருள் கொள்வர்.

வேதங்களின் பிரிவுகள் – அவை நான்கு பாகங்கள் என்பர். அவை மந்திரங்கள் பிராமணங்கள் அரண்யகங்கள் உபநிடதங்கள் என்பன. இவற்றில் இறுதிப் பகுதியாக உள்ள இரண்டும் அதாவது அரண்யகம் உபநிடதம் என்ற இரண்டும் பெரும்பான்மை தத்துவ ரீதியில் அமைந்தவை. மேலும் வேதத்தில் கர்ம காண்டம் ஞானம் இருபகுதிகளாக உள்ளன என்பர் சிலர். சடங்குகள் மந்திரங்கள் முதலியன கர்ம காண்டத்தில் அடங்கும். ஞான காண்டம் தத்துவத் தேடலை உள்ளடக்கியது. ரிக் யஜுர் சாமம் அதர்வணம் என வேதங்கள் நான்கு வகைப்படும். இவற்றில் உள்ள பிரிவுகளை உபநிஷதங்கள் என்றும் அவை 108 எனவும் அவற்றில் 14 உபநிஷதங்கள் முக்கியமானவை என்றும் கூறுவர்.

வேதம் என்றால் என்ன?

எழுத்துக்கள் தோன்றாத பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மனிதன் வாழ்ந்த விதம் பற்றி அறிதல் வேண்டும். அக்காலத்தில் இயற்கையின் இரகசியங்களை அறிய முயன்ற முனிவர்கள் பலவாறு தவங்கள் செய்து இயற்கையைக் கடந்து சுதந்திரமான நிலையை அடைந்தனர். இவ்வாறு பலகாலமாக அவர்கள் வாய்வழி வெளிப்பட்ட சொற்களே வேதங்கள் ஆயின. அவர்களுடைய சீடர்கள் அவற்றை மனப்பாடம் செய்து கொண்டனர். இவ்வாறு மனனம் செய்தவையே வேதங்கள் ஆயின. இவ்வாறு வந்தவை அறிஞர்களால் பாது காக்கப் பெற்றன.

**வேதங்களில் இருப்பவை**

பிரார்த்தனைகள், யாகங்கள், சடங்குகள், அறிவுரைகள் போன்றவை. மழைபொழிய வேண்டுமா? இன்ன இன்ன பிரார்த்தனைகள் செய்ய வேண்டும். இன்ன பலன் கிடைக்க

வேண்டுமா? இப்படி இப்படி யாகம் செய்ய வேண்டும்? திருமணமா இந்தச் சடங்கைச் செய்ய வேண்டும். மரணமா? இந்தச் சடங்கைச் செய்ய வேண்டும். சொர்க்கம் செல்ல வேண்டுமா? அறிவுள்ள குழந்தை பிறக்க வேண்டுமா? பலசாலியாக வேண்டுமா? பல ஆயிரம் ஆண்டுகள் வாழ வேண்டுமா? இன்னும் பல்வேறு ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதற்கான வழிகள் அங்கே சொல்லப்பட்டுள்ளன.

இவ்வாறு மனப்பாடம் செய்யப்பட்டவைகளை முறைப்படுத்தி வரிசைப்படுத்தினர். முனிவர்கள் அவற்றைத் தொகுத்து ரிக் யஜுர் சாமம் அதர்வணம் என நான்காகப் பிரித்தனர். அந்தக் காலத்தில் நடந்த இயற்கைப் பேரிடர்களினாலோ போர்களாலோ, நோய்களாலோ, வேதத்தை மனப்பாடம் செய்து வைத்திருந்த ஒருவரோ அல்லது ஒரு சமுதாயமோ அழிந்துவிட்டால், வேதத்தின் அந்தப் பகுதி முழுவதும். பிறகு அது திரும்பக் கிடைக்காது. இவ்வாறு வேதத்தின் பெரும்பகுதி அழிந்துவிட்டது. ஆகவே இவற்றை மீண்டும் கண்டு பிடித்துச் சரி செய்வது அவசியமானது. அதற்காக எழுத்துக்கள் கண்டு பிடிக்கப்பட்டன. மரப்பட்டைகள் இலைகள் கல்வெட்டுகள் போன்றவற்றில் வேதங்களை எழுதத் தொடங்கினார்கள். இதனால் மொழி உருவாயிற்று. அக்காலத்தில் சமஸ்கிருதம் உருவாகவில்லை. அது பிற்காலத்தில் உருவான மொழி.

வேதங்கள் எழுதப்பட்ட பிறகு அவைகள் பலருக்குப் பயனுள்ளவையாக இருந்தன. அதன் கூடவே பல்வேறு கேள்விகளும், சந்தேகங்களும் எழுந்தன; அதனால் பல கருத்துக்கள் தோன்றின. அவைகள் பலரால் விவாதிக்கப்பட்டன. அவற்றை அப்படியே ஏற்றுக் கொள்வதில் சிக்கல் ஏற்பட்டது. அதனால் சிலர் தங்களுக்குப் பிடித்த பகுதிகளை ஏற்றுக் கொண்டனர். அவ்வாறு பின்பற்றியவர்கள் பல்வேறு மதப்பிரிவுகளை உருவாக்கினர்.

சிலர் சொர்க்கம் செல்வதற்குரிய கருத்துக்களை ஆதரித்தனர். சிலர் முக்தி பற்றிய கருத்துக்களை ஆதரித்தனர். அதற்கே முக்கியத்துவம் கொடுத்தனர். சிலர் யாகங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தனர். பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் பாரதப்போர் நடக்கும் போது

பார்த்தனுக்கு உபதேசித்த மொழிகளே பகவத் கீதை என்று அழைக்கப்பட்டது. இதன் மூலமாகத்தான் வேதாந்தம் என்ற நெறி உருவானது. இதனால் தான் தற்கால இந்துமதம் என்பது உருவானது. இது வேதாந்த நூல்களில் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. இது சொர்க்கம் செல்வது போன்ற பல கருத்துக்களைக் கூறவில்லை. எதையும் குறை கூறவில்லை. அனைத்தும் நானே என்ற தத்துவத்தை உள்ளடக்கியதாகப் பகவான் கண்ணன் கூறுவதே கீதையின் உட்பொருள். எனவே என்னைச் சரணடை என்ற சரணாகதித் தத்துவத்தைச் சொல்வதே கீதையின் சாராம்சம்.

**கீதை காட்டும் பாதை :**

1. அதிகம் பேசாதவனை உலகம் அதிகம் விரும்புகிறது. அளந்து பேசுபவனை அதிகம் மதிக்கிறது. அதிகம் செயல்படுபவனையே கைகூப்பித் தொழுகிறது.

2. கற்ற அறிவையும், பெற்ற செல்வத்தையும் இறுதிக் காலம் வரை மற்றவர்களுக்காகச் செலவிடுங்கள்.

3. நம்முடன் வாழ்வோரைப் புரிந்து கொள்வதற்கு நம்மை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.

4. நம்பிக்கை குறையும் போது ஒவ்வொரு மனிதனும் நெறியற்ற கொள்கையை மேற்கொள்கிறான்.

5. சலித்துக் கொள்பவன் ஒவ்வொரு வாய்ப்பிலும் உள்ள ஆபத்தைப் பார்க்கிறான். சாதிப்பவன் ஒவ்வொரு ஆபத்திலும் உள்ள வாய்ப்பினைப் பார்க்கிறான்.

6. மகிழ்ச்சி என்ற உணர்ச்சி மட்டும் இல்லா விட்டால் வாழ்க்கை என்பது சுமக்க முடியாத பெரிய சுமையாகியிருக்கும்.

7. உலகம் ஒரு விசித்திரமான கல்லூரி. இங்கே பாடம் சொல்லிக்கொடுத்துத் தேர்வு வைப்பது இல்லை. தேர்வு வைத்த பிறகே பாடம் கற்பிக்கப்படுகிறது.

8. சிக்கனம் என்பது ஒருவன் பணத்தை எவ்வளவு குறைவாகச் செலவு செய்கிறான் என்பதைப் பொறுத்தது அல்ல. அதை அவன் எவ்வளவு உபயோகமாகச் செலவிடுகிறான் என்பதைப் பொறுத்தது ஆகும்.

9. எதை இழந்தீர்கள் என்பதல்ல முக்கியம், என்ன மிச்சம் இருக்கிறது என்பதே முக்கியம்.

10. அரிய சாதனைகள் அனைத்தும் வலிமையினால் செய்யப்பட்டவை அல்ல. விடாமுயற்சியினால் தான்.

11. முன்நோக்கிச் செல்லும் போது கனிவாயிரு. ஒருவேளை பின்நோக்கி வரநேரிட்டால் யாராவது உதவுவார்கள்.

12. ரகசியத்தை வெளிப்படுத்தியவனுக்கும், துக்கத்தை வெளிப்படுத்தாதவனுக்கும் மனதில் நிம்மதி இருக்காது.

13. எல்லோரையும் நம்புவது அபாயகரமானது. ஒருவரையும் நம்பாமல் இருப்பது இன்னும் அபாயகரமானது.

14. எல்லாத் துன்பங்களுக்கும் இரண்டு மருந்துகள் உள்ளன. ஒன்று காலம், இன்னொன்று மௌனம்.

15. எல்லோரும் தன்னை விட்டு விட்டு வேறு யாரையோ சீர்திருத்த முயலுகிறார்கள்.

16. ஆசையில்லாத முயற்சியால் பயனில்லை. முயற்சியில்லாத ஆசையால் பயனில்லை.

17. செயல் புரியாத மனிதனுக்குத் தெய்வம் ஒருபோதும் உதவி செய்யாது.

18. சண்டைக்குப் பின் வரும் சமாதானத்தைவிட, என்றும் சண்டையே இல்லாத சமாதானம்தான் வேண்டும்.

19. நேற்றையப் பொழுதும் நிஜமில்லை; நாளையப் பொழுதும் நிச்சயமில்லை; இன்றைக்கு மட்டுமே நம் கையில்.

20. மகிழ்ச்சியாய் நீ வீணாக்கிய தருணங்களெல்லாம் வீணானவையல்ல.

21. பழமையைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் புதுமையைச் சிறப்பாகப் படைக்க முடியாது.

22. வாசிப்புப் பழக்கம் என்பது அருமையான ருசி, அழகான பசி. ஒரு முறை சுவைக்கப் பழகிவிட்டால் அது தொடர்ந்து வரும்.

23. நீங்கள் விரும்பும் ஒருவேலை உங்களுக்குக் கிடைக்காமல் போகலாம். ஆனால் உங்களுக்குக் கிடைத்தே தீரும்.

24. அறிவு ஒன்றுதான் அச்சத்தை முறிக்கும் அரிய மருந்து. அறிவை வளர்த்துக் கொண்டால் எல்லாவிதமான பயங்களும் அகன்றுவிடும்.

25. தவறு நேர்ந்து விடுமோ என்று அஞ்சி அஞ்சி எந்தச் செயலையும் செய்யாமல் பின் வாங்குவது இழிவானது.

**கண்ணன் சொல்வது :**

உன் சுமைகளை எல்லாம் இறக்கி வை. தருமம் அதருமம் ஆகிய இரண்டுக்கும் பொறுப்பாளி நீ அல்ல என்பதை அறிந்து என்னை ஒரே புகலிடமாகக் கொண்டு உன் கடமையைச் செய். பலனை என்னிடத்தில் விட்டுவிடு. இதுவே இறுதியாகக் கண்ணன் சொல்வது.

போர் புரியேன் என்ற பார்த்தனை மாற்றுவதற்காகக் கண்ணனால் சொல்லப்பட்ட வாதங்கள் இந்து சமயத்தவர்களுக்கும் பொருந்துவதாகும்.

உலகப் பற்றினை நீக்கி யோக சாதனையைச் செய்து கொண்டே இரு.

பலனில் பற்றற்று சமதர்மத்தில் ஒழுகு.

ஈசனை மறக்காதே. இரண்டற்ற பரம்பொருளிடம் சுயநலமற்ற பக்தியைச் செலுத்து; மெய்ப்பொருளையே புகலிடமாகக் கொள்.

யாரையும் எதையும் வெறுக்காமல் இருக்கும் சம நோக்கு அல்லது பரம்பொருள் உணர்வு என்னும் முடிவை நோக்கிச் செல்.

**முடிவான போதனைகள்**

எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது.

எது நடக்கிறதோ அது நன்றாகவே நடக்கிறது.

எது நடக்க இருக்கிறதோ அது நன்றாகவே நடக்கும்.

உன்னுடையதை எதை இழந்தாய் என்று நீ அழுகிறாய்?

எதை நீ கொண்டு வந்தாய் அதை நீ இழப்பதற்கு?

எதை நீ படைத்தாய் அது வீணாவதற்கு?

எதை நீ எடுத்துக் கொண்டாயோ அது இங்கிருந்தே எடுக்கப்பட்டது.

எதை நீ கொடுத்தாயோ அது அங்கேயே கொடுக்கப்பட்டது.

எது இன்று உன்னுடையதோ அது நாளை மற்றொருவருடையது ஆகின்றது.

மற்றொருநாள் அது வேறு ஒருவருடையது ஆகும்.

இதுவே உலக நியதியும் படைப்பின் சாரமும் ஆகும்.

**நிறைவுரை :**

பழமையான உபாயங்களான கர்மயோகத்தாலும் பக்தி யோகத்தாலும் மற்றும் ஞான யோகத்தாலும் தூய்மை அடைந்த நெஞ்சில் மிகவும் வைராக்கியம் உடையவர்கள் பக்தி யோகத்தால் அடையும் பரம்பொருள் ஆகிய நாராயணனே அறிவாளிகள் ஏற்றுக் கொண்டு எண்ணும் பொருளாவான்.

## இயற்பகை முனிவா! ஓலம்!

(சிந்தாந்த ரத்தினம் அ.மாசிலாமணி)

சோழவள நாட்டில் பூம்புகார் எனவும் காவிரிப்பூம்பட்டினம் எனவும் புகழ்பெற்ற நகரத்தில் தனவணிகர் குலத்தில் இயற்பகை நாயனார் என்னும் பெயர் கொண்டஓர் அடியார் வாழ்ந்து வந்தார்.

சிவபக்தி உடைய இவர், தம்பால் சிவனடியார்கள் வந்து விரும்பிக் கேட்பது எதுவாய் இருந்தாலும், கேட்கப்படும் பொருள் தம்மிடம் உள்ளதாயின் இல்லையே என்னாது கொடுக்கும் இயல்புடையவராய் இருந்தார்.

பெரிய புராணத்தில் இல்லை என்று சொல்லாமல் கொடுத்துத் தொண்டு செய்தவர்கள் உண்டு. சிறுத்தொண்ட நாயனார், மானக்கஞ்சாற நாயனார் ஆகியோர் அடியார்கள் கேட்டதைத் தந்தருளியவர்கள் ஆவர்.

இங்ஙனம், கொடுப்பதில் ஒரு வித்தியாசமான முறையில் அடியார் கேட்ட பொருளை இல்லை என்னாது கொடுத்துப் பெருமை பெற்ற காரணத்தினால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன் எனத் தேற்றேகார அடைமொழியுடன் இயற்பகை நாயனாரைப் பாராட்டினார். இப்படித் தேற்றேகாரம் சுட்டிக்

காட்டிய அளவில் சுந்தரமூர்த்தியாரால் பெருமை கொண்ட ஒரே அடியார் இயற்பகை நாயனார் மட்டுமே ஆவார்.

இந்நிலையில், இவ்வடியாரின் மாறாத எண்ணத்தை உலகோர்க்குக் காட்ட வேண்டி அம்பலத்தில் ஆடும் சிவபெருமான் வேதியர் வடிவில் தூர்த்த வேடம் தரித்து இயற்பகையாரின் இல்லத்திற்கு வந்தார். இங்ஙனம் வந்ததைச் சேக்கிழார் அம்பலத்துள் நின்றாடுவார் உம்பர் நாயகிக்கும் அஃதறியவோ? பிரியா நங்கைதான் அறியாமையோ? அறியோம் மாய வண்ணம் கொண்டு வந்தார் என்றார்.

இப்படிச் சேக்கிழார் ஐயப்படுவதில்தான் இயற்பகை நாயனாரின் செயல் நுட்பம் அமைந்துள்ளது எனலாம். ஏனெனில் உமையம்மைக்குத் தெரிந்துதான் வந்தார் என்றால் குற்றமில்லை. தெரியாமல் வந்தார் என்றால் குற்றம். இச்சிக்கலுக்குச் சேக்கிழாரின் சொல் திறந்தான் வரலாற்றுக்குப் பாதகம் வராதபடி தடுத்துள்ளது எனலாம்.

சிவபெருமானைச் சேக்கிழார் ஆறுசூடிய ஐயர்தான் வந்தார் என்பதன் மூலம் இடப்பாகத்தில் உள்ள உமையம்மைக்குத் தெரியாவிட்டாலும் உச்சியில் உள்ள கங்காதேவிக்குத் தெரியாமல் வந்திருக்க முடியாது எனத் தெரிவதால் அவர் மிக எச்சரிக்கையோடு பத்தியின் திறம் அறிய வந்தார் எனத் தெரிகிறது. அதாவது ஒருவரது செயலைக் கண்காணிக்க உயர்ந்த இடத்தில் பொருத்தப்படும் கண்காணிப்புக் கருவிபோலக் கங்காதேவி சடையில் உள்ளாள் என்ற எச்சரிக்கையோடு திறம்அறிய வந்தார் என்பதால் நாயனாரின் மனைவியை விரும்பி வரவில்லை எனத் தெரிகிறது.

இந்த அடிப்படைக் கருத்துப் பீடத்தின் மீதுதான் இயற்பகையாரின் சொல் அசையாமல் நிறுத்தப்பட்டுள்ளது. பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது எனலாம். இந்நிலையிலேயே வந்த தூர்த்தருக்கும் இயற்பகையாருக்கும் உரையாடல்களை நிகழ்த்திக் காட்டுவதின் மூலமும் செயல் கெட்டிப்படுகிறது.

வந்த சிவபெருமான் அடியார் வேண்டின மறாது உவந்தளிக்கும்

உண்மை கேட்டு நும்பால் ஒன்று வேண்டி வந்தனன் என்றார். ஈண்டுச் சிவனது கூற்றில் கேட்பவர், கொடுப்பவர் பற்றிய வேறுபாட்டுநிலை தெரிகிறது.

கொடுப்பவர் இல்லை என்னாது கொடுக்க வேண்டும். ஆனால் கேட்பவர் தம்பால் இல்லாததைத்தான் கேட்பார் என்றில்லாமல் எதையும் கேட்கலாம் எனத் தெரிவதால்தான், வந்தவர் திறம்அறிய வந்தவர் என்ற உண்மையைக் காட்ட ஒன்று வேண்டி வந்தனன் எனக் கூறியதாகச் சேக்கிழார் கூறினார்.

கேட்டுப் பெறவந்த சிவபெருமானிடம் ஏதும் இல்லாதது இல்லை என்பதால் இயற்பகையாரிடம் எதையும் கேட்க வேண்டியதில்லை என்பதோடு, ஒன்றுக்கு இரண்டான மனைவியையும் பெற்றதால், அவர் இயற்பகையார் மனைவியைப் பெற வரவில்லை எனத் தெரிகிறது. அதனால் தான் சேக்கிழார் தம்தொண்டர் (இயற்பகையார்) மறாத வண்ணம் காட்டுவார் வந்தார் என்றார்.

மறாத வண்ணம் என்பது மாறாத மனநிலை என்பதாகும். இதற்கேற்பவே சிவனார் மாய வடிவம் கொண்டாரே அன்றி மாய எண்ணம் கொண்டார் இல்லை என உணரும்படிச் செய்யவே, இயற்பகையார் எண்ணத்தைச் சிவபெருமான் தம் வண்ணக் கோலத்தால் (வடிவத்தால்) அளந்தார் என்றார் சேக்கிழார்.

மேலும் வந்தவர் இயற்பகையாரின் எண்ணத் திறம்அறிய வந்தார் என்பதை நினைக்கத் தூண்டுமாறு நும்பால் ஒன்று வேண்டி வந்தனன். அதனுக்கு இசையலாம் எனில் இயம்பலாம் என்பதான சேக்கிழார் கூற்றில் இசையலாம் எனில் இயம்பலாம் என்பது தேவையில்லாத ஒன்றாகும். கொடுக்க விருப்பம் இருந்தால் சொல்வேன் எனச் சிவன் கூறுவது இல்லையெனாது கொடுப்பவன் நீ எனக் கேட்டு வந்தேன் என முன்னர் கூறியதற்கு முரணாக உள்ளதால், வந்தவர் கபடதாரி எனவும் தெரிகிறது.

அதாவது கேட்பவர் இன்னது வேண்டும் எனக் கூறவேண்டுமே தவிர கொடுப்பவரைப் பார்த்துக் கொடுப்பதாக இருந்தால் கூறுவேன் எனக் கூறுவது கேட்க வந்தவர் கேட்பதைப் பற்றி அறியாத புதியவர் எனத்

தெரிவதால் இந்த நுட்பத்தை இயற்பகையார் அறிந்து கொண்டதால்தான் யாதொன்றும் என் பக்கல் உண்டாகில் தருவதாகக் கூறுகிறார். எனவே, சிவனார் கேட்கும் பொருள் நாயனாரிடம் இருக்க வேண்டும் என்பதுதான் கருத்தாக உணரப்படும்.

கொடுக்கப்படும் இயல்புடைய மனிதரிடம், கொடுக்கப்படும் பொருள் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம் என்பதால் என்பக்கல் உண்டாகில் என நாயனார் கூறியதைக் கேட்டுத் திகைத்த சிவனார், மன்னு காதல் உன் மனைவியை வேண்டி வந்த தாகக் கூறியதாய் வார்த்தைகளை நீள நினைந்து சேக்கிழார் பரிமாறினார்.

மன்னு காதல் உன் மனைவி என்பது உங்கள் இருவரையும் பிரிக்க முடியாது என்பதால் (மன்னு-நிலைபெற்ற) மனைவியைப் பிரித்துக் கொண்டு போக வந்ததாகக் கூறாமல், இல்லையே என்னும் உணர்வை மனைவியாகக் கொண்டு திறம்காண வந்ததாகச் சிவனது கூற்றை மிகத் திறமையாகப் பயன்டுத்தினார் சேக்கிழார்.

இந்நிலையில் நாயனார் கற்பின் மேம்படு காதலியாரைப் பார்த்து, இன்று உனை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன் என்றதைக் கேட்ட மனைவியார் என் உயிர்க்கொரு நாத! நீர் உரைத்ததொன்றை நான் செயும் அத்தனை அல்லால் உரிமை வேறுளதோ என்றார்.

ஈண்டுள்ள ஒவ்வொரு சொல்லும் பொருள் ஆழம் உடையவை. நாயனார், மனைவியின் சம்மதம் கேட்காமலேயே கொடுத்து விட்டதால்தான், மனைவி தன்னைக் கேட்காமலே கணவர் இம் முடிவுக்கு வந்துவிட்டாரே என்பதால் கலங்கினார். பின்னர் தெளிந்ததால் என் உயிருக்கு நாத என மொழிந்தார் மனைவி.

இதுவரை அதாவது தன்னை அடியாருக்குக் கொடுக்கும் முன்வரை தனது உடம்புக்கு உடம்பாக இருந்த கணவர் (நாயனார்) தன்னை அடியார்க்குக் கொடுத்துவிட்ட பிரிவினையால் தனக்குச் சூக்குமாம் உயிராகி விட்டதால் என் உயிர்க்கொருநாத என்றார்.

இங்ஙனம் மனைவி கூறியதால் இதுவரை கணவனுக்கு உயிராக இருந்த மனைவி, உயிர் நீங்கிய உடலாகி விட்டதால் கணவனாகிய உயிர் செலுத்தும் வழி, உடல் இயங்கும் என்ற கருத்தின் அடிப்படையில்

நீர் உரைத்த தொன்றை நான் செயும் அத்தனையும் அல்லால் உரிமை வேறுளதோ எனத் தம்மை உயிரற்ற உடலாய்ப் பின்தொடர்ந்தார். இந்நிலை அறிந்த சுற்றத்தார் பலரும் எதிர்த்தனர்.

ஆனால் சிவனோ, அஞ்சுவார்போல் அம்மையாரைப் பார்த்தாராம். அம்மையார் இறைவனே அஞ்சவேண்டா இயற்பகை வெல்லும் என ஆறுதல் கூறினாராம். ஏனெனில் வந்த அடியார் உலக வழக்கத்திற்கு மாறாக மனைவியைக் கேட்க வந்தவர் இல்லை என்பதை நுட்பமாக உணர்ந்ததால் இறைவனே என்று சிலேடையில் மொழிந்தார்.

சிவ அடியாராக இருக்கும் எவரும் இவ்வாறாக விரும்பமாட்டார் எனக் கணவர் நினைத்து, இது தமக்கு வந்த இடையூறு என எண்ணியே தன்னைக் கொடுக்கத் துணிந்ததை நுட்பமாக உணர்ந்த மனைவி, கணவரது இல்லையே என்னாத பண்பைச் சிறப்பிக்க வேண்டி இறைவனே! கணவர் வெல்லும் அஞ்ச வேண்டா எனக் கூறாமல் இயற்பகை வெல்லும் என்றது கணவன் மனைவிக்கு உள்ள தெய்வீக உறவைப் புதுப்பித்துக் கூறிய ஆன்மீக வாசகம் எனலாம்.

எனவே வந்தவர் பெண்ணாசைப் பித்துடன் வந்தவர் இல்லை என்பதை நுட்பமாக உணர வேண்டியே சேக்கிழார் தையலைக் கொண்டு பெற்றம் ஊர்ந்தவர் படிமேற் செல்ல நாயனார் சுற்றத்தாரை எல்லாம் எதிர்த்தார் என்றார்.

பெண்ணின் நல்லாளுடன் பெருந்தகையாக இருப்பவர், மானிடப் பெண்ணை விரும்பி வந்திருக்க மாட்டார் என்ற குறிப்பை உணர்த்துமாறு சேக்கிழார் தைய்லைக் கொண்டு பெற்றம் ஊர்ந்தவர் செல்ல என்றார். அதனால்தான் இறையருளுக்கு ஆளான நாயனாரின் மனைவியைத் திருவுடை மனைவியாரைக் கொடுத்திட என்றார்.

மனைவியை மனைவியார் எனப் பன்மையில் மரியாதையுடன் கூறிய குறிப்பும் சேக்கிழாரின் சொல் திறத்திற்கு எடுத்துக்காட்டாகும்.

திறம் அறிய வந்த சிவஅடியார்தான் உன் மனைவியை வேண்டி வந்தேன் என்று கூறுவதாகச் சேக்கிழார் அந்த ஓரிடத்தில் மட்டுமே;

மனைவி என்பதற்குப் பிறகு கூறப்படும் நிகழ்ச்சி முழுவதுமான இடங்களில், காதலியார், மனைவியார் என ஆர் விகுதியிட்டுச் சிறப்பித்தார்.

செயற்கரும் செய்கை இயற்பகை முனிவா ஓலம் எனப் புராணத்தின் நிறைவுப் பகுதியில் இறைவன் இயற்பகையாருக்குக் காட்சி கொடுத்த போது பழுதிலாய் நண்ணிய மனைவியோடு நம்முடன் போதுக என அருளியதாகச் சேக்கிழார் கூறுகிறார்.

இதில் மனைவியோடு என்ற சொல் உயர்ந்த பொருளோடுதான் ஓடு சொல் வரும் எனக்கூறும் இலக்கணச் சிறப்பை நினைவுபடுத்துமாறு இயற்பகை நாயனாரின் மனைவியை இறைவனே அங்கீகரித்ததாகச் சேக்கிழார் கூறுவது சிறப்பான ஒன்றாகும்.

எனவே, சேக்கிழார் சொல் திறனால், இயற்பகை நாயனாரின் வரலாறு சமூகத்தில் ஐய வினாக்களுக்கு ஆன்மீக வழி விடைதருவதாக உள்ளது. அதனால்தான் நாயனாரின் மனைவி இறைவனிடம் இயற்பகை வெல்லும் என்று கூறிய வார்த்தையையே, இறைவனும் இயற்பகை முனிவா ஓலம் என்றார் என்றால் பெரியபுராணப் பெருமையைக் கூற முடியுமோ? மனைவியை அடியாருக்குத் தத்தம் செய்ததும் நாயனார் உலக வாழ்க்கை முனிந்ததால் முனிவா என இறைவனால் அழைக்கப்பட்டதும் தொண்டர்தம் பெருமையே.

## திருமந்திரம்

(வெற்றியூர் அரு. சுந்தரம்)

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய சிவபெருமானைப் போற்றித் துதி செய்ய, வணங்கி வழிபட, மூவர் முதலிகள் அருளிச் செய்த தேவாரத்தையும், கல்லையும் கரைத்து உருகச் செய்யும் கனி வாசகமாம் திருவாசகத்தையும் நாம் பெற்றுள்ளோம்.

இவை தவிர, சைவ சமயச் சான்றோர்கள் பல நூல்களை நமக்கருளியுள்ளனர்.

இவற்றைத் திருமுறைகள் என நம் முன்னோர்கள் தொகுத்து வைத்துள்ளனர்.

அவ்வாறு தொகுக்கப்பட்ட சைவத் திருமுறைகள் பன்னிரண்டாகும். இதில் திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும்.

**மந்திரம் என்றால் என்ன?**

இறைவனை வணங்கப் பயன்படும் சொற்கள் மந்திரமாகும்.

அதாவது மறை மொழியே மந்திரம் எனப்படும். நிறை மொழி மாந்தர் மறை மொழி பகர்வர்.

இறைவன் திருப் பெயரை, சிவ சிவ என்றோ, ஜய ஜய சங்கரா ஹர ஹர சங்கரா என்றோ சொன்னால் சிவகதி கிடைக்கும் என்பது திருமூலர் வாக்கு.

மந்திரம் என்பது மறை மொழிச்சொற்கள் மட்டுமல்ல.

பசு மாட்டின் சாணத்தால் (கன்றின் சாணம் சாலச்சிறந்தது) உற்பத்தி செய்யப்படும் திருநீறும் மந்திரமாகும்.

சூலை நோயால் அவதிப்பட்ட திருநாவுக்கரசுக்கு அவரது தமக்கையார் திலகவதியார் கொடுத்த திருநீறே அவர் பிணியைப் போக்கியது. இதன் மூலம் திருநீறும் மந்திரம் தான் என்பதை நாம் அறியலாம்.

அதனால் தான் திருஞான சம்பந்தர் **மந்திரமாவது நீறு** எனத் திருநீற்றுப் பதிகம் பாடினார்.

திருமந்திரம் திருமந்திர மாலை என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது. ஒழுக்கத்தை உபதேசிப்பதும் ஞானத்தோடு இணைந்த பக்திவாழ்க்கைக்குப் பயிற்சி அளிப்பதும் திருமந்திர நூலின் அடிப்படைக் கருத்தாகும். அதனால் இந்நூலை அனுபவ ஞானத்திருநூல் என்று சான்றோர்கள் அழைப்பர்.

எனவே இது மறை நூலாகும்.

**திருமூலர் யார்?**

நந்தியம் பெருமான் (நந்தி என்பது சிவபெருமானைக் குறிக்கும்) திருவருள் பெற்ற நான் மறையோர்களில் ஒருவர். வேத ஆகம சாரத்தைத் தமிழில் எழுதுவதற்காக வந்தவர்..

இதனைப் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவராகிய சேக்கிழார் பெருமான்

உள்ளுணர்வான ஞானம் முதலிய ஒரு நான்கு உண்மை தெள்ளு தீந்தமிழாற் கூறும் திருமூலர் எனப்பாடுகிறார்.

திருமூலர் அணிமா சித்தி பெற்றவர். சைவ ஆசாரியர்கள் அனைவருக்கும் ஆச்சாரியராக மதித்துப் போற்றப்படுபவர்.

இவர் 18 சித்தர்களில் ஒருவராகவும் 63 நாயன்மார்களில் ஒருவராகவும் போற்றப்படுகிறார்.

இவர் மரத்தடியில் 3000 ஆண்டுகள் தவம் இருந்து ஆண்டுக்கு ஒரு பாடலாக 3000 பாடல்கள் பாடியருளினார் எனச் சைவ சமய வரலாறுகள் கூறுகின்றன.

அந்த ஞான நூலில் ஒரு சிறு துளியைப் பார்ப்போம்.

மக்கள் நல் வாழ்வு வாழ்வதற்காகப் பல அறிவுரைகளைத் திருமூலர் கூறுகிறார்.

அவற்றுள் முக்கியமானவை மூன்று; அவை :

1. பாவம் செய்யாதீர்கள்.

2. புண்ணியச் செயலைச்செய்யுங்கள்.

3. இறைவனுடைய பேரின்பத்தை இந்த உடம்பு இருக்கும் போதே பெற்று அனுபவியுங்கள்.

உள்ளத்தில் கருணையை வளர்த்துக் கொள்ள ஈகைப்பண்பு வேண்டும்.

பசித்து வருபவர் யாராக இருந்த போதிலும் வேறுபாடு காட்டாமல் உணவு கொடுக்க வேண்டும்.

பசித்தவர்கள் யாராவது வருகிறார்களா என்று பார்த்து விட்டு நாம் சாப்பிட வேண்டும். இதைத்தான் அன்னமிட்ட நாயன்மார்கள் அனைவரும் செய்தனர். ஏனெனில் தானத்தில் சிறந்தது அன்னதானமாகும்.

நாம் சாப்பிடும் முன்பு காக்கைக்குச் சோறிடுகிறோம். உடனே காகம் சாப்பிடுவதில்லை கா கா எனக் கரைந்து தன் இனத்தை அழைத்துப் பின் சாப்பிடும்; இதை நாம் அறிவோம்.

இந்த இயற்கைக் குணத்திலிருந்து வாழ்க்கைத் தத்துவத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்கிறார் திருமூலர்.

*ஆர்க்கும் இடுமின்*
*அவர் இவர் என்னன்மின்*
*பார்த்திருந் துண்மின்*
*பழம் பொருள் போற்றன்மின்*
*வேட்கை உடையீர்*
*விரைந் தொல்லை உண்ணன்மின்*
*காக்கை கரைந்துண்ணும்*
*காலம் அறிமினே!*

என்ற திருமூலரின் வாக்கின் படி அன்னதானம் செய்து வாழ்வோமாக!

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கேள்வி

கற்றறிந்தவர்கள் கூறுவதைக் கேட்டறிதல்

**1. செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்**
**செல்வத்துள் எல்லாம் தலை.**

செல்வத்துள் செல்வம் - ஒருவர் பெறும் செல்வங்களுக்குள் சிறந்த செல்வம்; செவிச்செல்வம் - செவியினால் பெறும் செல்வம்; அச்செல்வம் - அந்தச் செல்வம் தான்; செல்வத்துள் எல்லாம் தலை - பிறசெல்வங்கள் யாவற்றினும் முதன்மையாகும்.

ஒருவர் பெறும் செல்வங்களுள் செவியினால் வரும் செல்வமே சிறந்த செல்வம் ஆகும்; அந்தச் செல்வம்தான் பிற செல்வங்கள் யாவற்றினும் முதன்மையாகும்.

செவிச் செல்வம் - மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**2.செவிக்கு உணவு இல்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும்.**

செவிக்கு உணவு - செவிக்கு உணவாகிய கேள்விச் செல்வம், இல்லாத போழ்து - இல்லாத பொழுது, சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் - வயிற்றுப்பசி தீர்க்கும் உணவு சிறிதளவு இடப்படும்.

செவிக்கு உணவாகிய கேள்விச் செல்வம் இல்லாத பொழுது சிறிதளவு உணவு வயிற்றுக்கு இடப்படும்.

உணவு - உவம ஆகுபெயர்.

**3. செவியுணவிற் கேள்வி உடையார் அவியுணவின்**
**ஆன்றோரோடு ஒப்பர் நிலத்து.**

செவியுணவிற் கேள்வி - செவியுணவாகிய கேள்வியினை; உடையார் - உடையவர்கள்; அவியுணவின் ஆன்றாரோடு - வேள்வித்தீயில் கொடுக்கப்படும் உணவினை உடைய தேவர்களோடு; ஒப்பர் நிலத்து - நிலவுலகின்கண் ஒத்தவராவர்.

இந்நிலவுலகின்கண் செவியுணவாகிய கேள்வியினை உடையவர்கள் வேள்வியில் கொடுக்கப்படும் உணவினை உடைய தேவர்களோடு ஒத்தவராவர்.

செவியுணவு – மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

**4. கற்றிலன் ஆயினும் கேட்க அஃதுஒருவற்கு**
**ஒற்கத்தின் ஊற்றாம் துணை.**

கற்றிலன் ஆயினும் கேட்க - கற்றறிய வேண்டிய நூல்களைக் கற்கவில்லை என்றாலும் கேட்டு அறிந்து கொள்க; அஃது – அக்கேள்வி; ஒருவற்கு - ஒருவனுக்கு; ஒற்கத்தின் - தளர்ச்சி ஏற்படும் போது; ஊற்றாம் துணை – ஊன்று கோலாக நிற்கும் துணை ஆகும்.

நூல்களைக் கற்கா விட்டாலும் கேட்டு அறிந்து கொள்க; அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி ஏற்படும் போது ஊன்று கோலாக நிற்கும் துணை ஆகும்.

கேட்க – வியங்கோள் வினைமுற்று.

ஊற்றாம் – ஊன்றாம் என்பதன் வலித்தல் விகாரம்.

**5. இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே**
**ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.**

இழுக்கல் உடையுழி – வழுக்குதல் ஏற்படும் போது; ஊற்றுக் கோல் அற்றே – வழுக்கிவிடாமல் காக்கும் ஊன்று கோல் போன்றது; ஒழுக்கம்

உடையார்வாய்ச் சொல் - அறிவும் ஒழுக்கமும் உடையவர்களின் வாயிலிருந்து வரும் சொற்கள்.

அறிவும் ஒழுக்கமும் உடையவர்களின் வாயிலிருந்து வரும் சொல் வழுக்குதல் ஏற்படும் போது வழுக்கிவிடாமல் காக்கும் ஊன்றுகோல் போன்றது. எனவே அறிஞர் சொல்லைக் கேட்க வேண்டும்.

வாய்ச்சொல் - ஐந்தாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

அற்றே - உவம உருபு.

**6.எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்.**

எனைத்தானும் - எந்த அளவினதானாலும்; நல்ல சொற்களைக் கேட்க; அனைத்தானும் - அந்தந்த அளவில்; ஆன்ற பெருமை தரும் - அந்தச் சொற்கள் நிறைந்த பெருமையினைத் தரும்.

எந்த அளவினதானாலும் நல்ல சொற்களைக் கேட்க; அந்தச் சொற்கள் அந்தந்த அளவில் நிறைந்த பெருமையினைத் தரும்.

**7.பிழைத்து உணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்து உணர்ந்து**
**ஈண்டிய கேள்வி யவர்.**

பிழைத்து உணர்ந்தும் - தாம் பிழையாக உணர்ந்தாலும்; பேதைமை சொல்லார் - அறிவின்மையைக் காட்டும் சொற்களைச் சொல்ல மாட்டார்கள், இழைத்து உணர்ந்து - ஆராய்ந்து உணர்ந்து; ஈண்டிய கேள்வியவர் - நிறைந்த கேள்வி அறிவினை உடையவர்கள்.

ஆராய்ந்து உணர்ந்து நிறைந்த கேள்வி அறிவினை உடையவர்கள் தாம் பிழையாக உணர்ந்தாலும் தம் அறிவின்மையைக் காட்டும் சொற்களைச் சொல்லமாட்டார்கள்.

பிழைத்து, இழைத்து - வினை எச்சங்கள்.

**8.கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்**
**தோட்கப் படாத செவி.**

கேட்பினும் - ஓசை அளவில் கேட்டாலும்; கேளாத் தகையவே - கேட்கும் தன்மை இல்லாத தன்மையே ஆகும்; கேள்வியால் தோட்கப்படாத செவி - கேள்விச் செல்வத்தால் துளைக்கப்படாத செவி.

கேள்விச் செல்வத்தால் துளைக்கப்படாத செவி ஓசை அளவில் கேட்பதாயினும் கேட்கும் தன்மை இல்லாத நிலையே ஆகும்.

கேளா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**9. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
**வாயினர் ஆதல் அரிது.**

நுணங்கிய கேள்வியர் அல்லார் - நுண்ணிதாகிய கேள்வி உடையவர் அல்லாதவர்; வணங்கிய - பணிவான; வாயினராதல் அரிது - மொழியினைச் சொல்பவராதல் அரிதாகும்.

நுண்ணிதாகிய கேள்வி உடையவர் அல்லாதார் பணிவான மொழியினைச் சொல்பவராதல் அரிதாகும்.

கேள்வியர், வாயினர் - குறிப்புவினையால் அணையும் பெயர்.

**10. செவியிற் சுவைஉணரா வாயுணர்வின் மாக்கள்**
**அவியினும் வாழினும் என்.**

செவியிற் சுவையுணரா - செவியினால் நுகரப்படும் கேள்வியின் சுவை உணராத; வாயுணர்வின் மாக்கள் - வாயினால் உணரப்படும் சுவையுணர்வைக் கொண்ட மாந்தர்; அவியினும் வாழினும் என் - இறந்தாலும் இருந்தாலும் உலகிற்கு என்ன பயன்?

செவியினால் நுகரப்படும் கேள்விச் சுவையினை உணராது வாயினால் உணரப்படும் சுவையுணர்வைக் கொண்ட மாந்தர் இறந்தாலும் இருந்தாலும் உலகிற்கு என்ன பயன்?

உணரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; அவியினும் வாழினும் - உம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

*(தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 22

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

காவிரிப் பூம்பட்டினத் தொடர்பில் ஊரால் பட்டினத்தார் எனப்படுபவர் தெய்வீகப் பாடல் பாடும் திறனால் பாட்டினத்தார் எனப் பாடல் பாடும் தொழில் தொடர்பில் சிறப்புப் பெயரைப் பட்டினத்தாருக்குக் கொடுப்பது

சாலப் பொருந்தும் என்ற கருத்துக்குச் சான்றாக உள்ள பாடல்களே பட்டினத்தார் பாடிய திருவேகம் பமாலை பாடல்களுக்குப் பின்பாடிய திருத்தலப் பாடல்கள் ஆகும்.

தேவாரம் பாடிய மூவர் பலதிருத்தலங்கட்கும் நேரில் சென்று பாடல் பாடிச் சிறப் பித்ததால் அத்திருத் தலங்கள் - பாடல் பெற்ற தலம் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றது போல் பட்டினத்தாரும் பலதிருத்தலங்கட்கும் நேரில் சென்று பாடல் பாடி வழிபாடு செய்துள்ளார்.

குறிப்பாகத் திருமுறைகள் பாடிய 27 ஆசிரியர்களுள் பட்டினத்தாரும் ஒருவர் என்ற பெருமையை மூவருக்கு இணையாகப் பெற்றார் என்பது பட்டினத்தார்க்கான தனிச் சிறப்பாகும். அந்த வகையில் அவர் மூவர் பாடிய பெருநகரங்களுள் பலவற்றைப் பாடியுள்ளதை இனிக் காண்போமாக!

தில்லை என்னும் திருத்தலம் சைவர்களுக்கு இருதயமானது, இந்தியப் பெருநிலப் பரப்பில் திசைகளின் புவியீர்ப்பைக் கண்டறிந்த போது சிதம்பரமாம் தில்லையைப் புவியீர்ப்புக்குரியதாக உணர்ந்து கூறப்பட்டது.

ஆடல் வல்லானின் ஆட்டம் எப்போதும் தில்லையில் இருப்பதாக மெய்ஞானிகள் கண்டறிந்தனர். அவ்வுணர்வின் கருத்தையே சேக்கிழார், உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் என்றும் அலகில் சோதியன் அம்பலத்தாடுவான் என்றும் பெரிய புராணத்தில் ஆவணப் படுத்தினார். தில்லையை மையப் படுத்திப் பேசாத எந்தத் திருமுறையும் இல்லை என்பதால் தில்லையாம் சிதம்பரமே அறிவியல் மற்றும் ஆன்மீக இயல்களுக்குரிய தலைமை இடம் எனலாம். ஆக தில்லையைப் பாடிய அருளாளர்கள் வரிசையில் பட்டினத்தாரின் பாடல்கள் சேர்க்கப்பட்டாலும் அவை ஏனையோர் பாடல்களுக்கு வேறுபட்டதாக உள்ளன என்பது சிந்தனைக்கு விருந்தாக உள்ளது.

பட்டினத்தார், கோயில் நான் மணிமாலையில் பாடிய நாற்பது பாடல்களுக்கு முற்றிலும் மாறுபட்டதாக உலகியலை மையப் படுத்தித் தில்லைத் தலம் என்ற தலைப்பின்கீழ் இருபது பாடல்களைப் பாடியுள்ளார்.

உலகம் நிலையாமை என்ற அச்சின் கீழ் சுழல்கிறது என்பது அனைவரும் அறிந்த உண்மை யாயினும் அந்நிலையாமையால் யாரும் எதையும் செய்யாமல் இருந்து விடுவதில்லை என்பதும் உண்மையாகவே உள்ளது, இக்கருத்தைப் பட்டினத்தார்,

*தாம்பிணங் கும்பல ஆசையும்*
*விட்டுத் தனித்துக் செத்துப்*
*போம் பிணம் தன்னைத் திரளாகக்*
*கூடிப் புரண்டினி மேல்*
*சாம்பிணம் கத்துது ஐயோ!*
*என்செய்வேன் தில்லைச் சங்கரனே*

எனப்பாடலாகப் பதிவிறக்கம் செய்துள்ளார்.

உலக வாழ்வில் பல்வேறான ஆசைகளில் பிணங்கி (கலந்து) வாழ்ந்து திரிந்து இறுதியில் இறந்து பிணமாகி விட்ட மனிதனை இனிப்பிணமாகப் போகும் மனிதர்கள் கூட்டமாய்க் கூடிக்கதறுவது ஏன்? எனப் பட்டினத்தார் உலகியலின் நிலைக்கு வருந்துகிறார்.

தாமும் ஒருகாலத்தில் இப்படித்தான் ஆகப் போகிறோம் என உணர்ந்தாலும் மக்கள் இறந்த வர்க்காக அழாமல் இருப்பதில்லை என்பது வாழையடி வாழையான உண்மையாகத் தெரிகிறது. இஃதோர் முரணான வாழ்வியலாயினும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்தலை வற்புறுத்த வேண்டிக் கூறப்பட்ட அறிவுரையான உபதேசமாக உணர வேண்டும். இதைத்தான் தொல்காப்பியர் நிலையாமை பற்றிக் கூறும் காஞ்சித் திணையில்,

*கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ*
*ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலை*

என்று இறந்தவர் பற்றி இருப்பவர் பெருந் துன்பப்பட்டுப் புலம்புவதை நிலையாமைகளுள் ஒன்றாகக் கூறினார்.

இப்படித் தெரிந்த ஒன்றையே பட்டினத்தார் கூறினாலும் தில்லைச் சங்கரனே என் செய்வேன் எனச் சோர்வடைந்து பாடுவதால் ஓர் உண்மை ஒளிந்துள்ளதை உணர வேண்டியுள்ளது. அதாவது இறந்தவரைக் குறித்து மக்கள் வருந்துவது அறியாமை எனக் கூறும்

பட்டினத்தார், தாம் அவர்களுக்காக வருந்துவதை அறியாமையாகக் கருதாமல் பாடினார் என்பது முரணாக உள்ளது. தான் என்றாலும் அவரது புலம்பல் தில்லைச் சங்கரனை நோக்கியதாக உள்ளதால் இக்கருத்தை முரணாகக் கருதாதபடிப் பாடினார் எனலாம்.

சங்கரன் என்ற சொல்லுக்குச் சிவன் என்ற பொருள் உண்டு. இது பொதுவான பெயர் நிலையில் உணரப்படுவதாகும். ஆனால் சுகத்தை அருளுபவன் என்ற அவனது செயல்பாட்டளவில் கருத்தை உணரும் போது தான் மக்களைச் சங்கரனிடத்தில் ஆற்றுப் படுத்திப் பயன்பெறச் செய்யும் உத்தியாக அவரது புலம்பல் உலகியலைக் கடந்ததாக உள்ளது எனலாம், பட்டினத்தாரின் இக்குறிப்பு மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே என மணிவாசகர் (பாண்டிப் பதிகம் 5) மக்களை அழைத்து உபதேசித்ததான பொருத்தம் உள்ளது எனலாம்.

அடுத்த பாடல் ஓர் அதிசயத்துடன் பாடப்பட்டதாகும்; முத்தி தரும் தலங்களாக நான்கைக் கூறுவதுண்டு, பிறந்தாலே முத்தி தருவது திருவாரூர், இறந்தாலே முத்தி தருவது காசி, நினைத்தாலே, முத்தி தருவது திருவண்ணாமலை, சென்று கண்ணாரத் தொழுதாலே முத்தி தருவது சிதம்பரம் என்பர்.

இப்படிச் சிதம்பர தரிசனத்தைச் சென்று காணும் சிறப்பை அப்பரடிகள் எடுத்த பொற்பாதம் காணப் பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவது இம்மாநிலத் தே – என்றார். காணப் பெற்றால் என்பதாலே காணப் பெறாமலும் போகலாம் எனத் தெரிகிறது. திருநாளைப் போவாரின் சரித்திரமே இதற்குச் சான்று, எவ்வாறேனும் சென்று கண்டு விட்டால் அடுத்தடுத்தும் காணும் பேற்றைத்தா என மறு பிறவிக்கான வேண்டுதலை அப்பர் விண்ணப்பித்தார். ஆனால் பட்டினத்தாரோ கண்டு அனுபவிக்கும் இந்தப் பிறவியிலேயே அடையும் பேறுகளைக் கூறுவதோடு காணும் பேற்றால் அடையும் மெய்ப்பாட்டின் புளகாங்கிதத்தைக் கூறுவது அப்பரால் பாடியதற்குக் கூடுதலாகக் கூறிய சிறப்புச் செய்தி எனலாம்.

*சோறிடும் நாடு துணிதரும், குப்பை*
*தொண்டன் பரைக்கண்டு*
*ஏறிடும் கைகள் இறங்கிடும்*

*தீவினை எப்பொழுதும்*
*நீறிடு மேனியர் சிற்றம் பலவர்*
*நிருத்தம் கண்டால்*
*ஊறிடும் கண்கள் உள்ளுருகிடும்*
*நெஞ்சம் என்உள்ளமுமே!*

சிதம்பர நடராசரைக் கண்டால் ஏற்படும் உடலுக்கும் உள்ளத்திற்குமான நெகிழ்ச்சியைப் பற்றிக் கூறுகிறது இப்பாடல்.

அம்பலம் என்பது பொதுப் பெயர், கிராமத்தை நாட்டாண்மை செய்து தலைமை தாங்குவோரை அம்பலக்காரர் எனும் வழக்கம் பண்டைய நாளில் உண்டு, குறிப்பிட்ட எல்லைக்குரிய இடத்தில் வாழ்வோரின் தலைமை போல உலகத் தலைமையாக உள்ள இறைவனை அம்பலத் தரசு எனத் தில்லைச் சிதம்பரேசரைக் குறிப்பதுண்டு. எனவே தான் பட்டினத்தார் சிற்றம்பலவர் என மேற்படியான பாடலில் இறைவனைக் குறித்தார்.

தில்லையைப் பொறுத்த மட்டில் அம்பலம் என்பதை ஐந்தாகக் கூறுவர். பேரம்பலம், பொன்னம்பலம், சிற்றம்பலம், தேவம்பலம், நிருத்தம்பலம்; இந்த ஐந்தையும் சபை என்ற பொதுப் பெயர் கூட்டி ராஜசபை, கனகசபை, சிற்சபை, தேவசபை, நிருத்தசபை எனப் போற்றி வழிபடுவது வழக்கமாகும்.

சிற்சபையில் உள்ள நடராச மூர்த்தமே மூலவராகவும் உலாவரும் உற்சவராகவும் உள்ளார். இந்நடராசரின் வலப்பக்கச் சுவரில் சிவசக்தியான திருவம்பலச் சக்கரம் அமைந்துள்ளது. மந்திரயந்திரமாக இச்சக்கரம் பதிந்துள்ளது. இச்சக்கரத்தின் மீது தங்கத்தாலான வில்வ மாலை தொங்க விடப்பட்டிருக்கும். இதன் வெளிப்புறம் கருப்பும் உட்புறம் சிவப்பும் கொண்டதாக வடிவமைக்கப்பட்டிருக்கும்.

சிதம்பரம் ஆகாயத் தலமாதலால் ஆகாயத்தின் அருவ நிலையாக நடராசர் உள்ளார் என்பதும் அவரது அருளானது மறைப்புடன் கூடிய அருட்சக்தியாக வெளிப்படும் என்பதுமான தத்துவத்தை உணரச் செய்வதே சிதம்பர ரகசியம் என்பதும் தான் சிற்றம்பல நிருத்தத்தின் கருத்து. எனவே இந்த நிருத்த (கூத்தின்) ரகசியத்தைக் கண்டால், காண்போரின் உடல் புளகாங்கிதம் எய்தி நெஞ்சம் நெக்குருகி

நிற்பதோடு இம்மைக்கும் மறுமைக்குமான பயனைப் பெறுவர் என்கிறார் பட்டினத்தார்.

நடராசரைக் கண்டால் கை கூப்பி வணங்குவது போல அவரின் அடியாரைக் கண்டதும் நடராசரின் அம்சமாகவே கருதிக் கைகள் வணங்குமாம். இதனால் அப்பக்தர்களுக்கு நாட்டில் உள்ளவர்கள் தாமே முன் வந்து இம்மை வாழ்விற்குரிய பொருள் தந்து உதவுவார்கள். இதனைத் தான் நாடு சோறிடும் துணிதரும் என்றார் அடிகள்.

குப்பை தொண்டு அன்பரைக் கண்டக்கால்; தம்மை அறியாமலேயே கைகள் தலைமீது சென்று வணங்குமாம், அப்படி வணங்கினால் வணங்குவோரின் தீவினைகள் இறங்கி ஓடிவிடுமாம். இது எப்போதும் எல்லாக் காலத்திலுமான பேருண்மை என்று பதிவு செய்கிறார் பட்டினத்தார்.

இதில் குப்பை தொண்டு அன்பர் - என்றது கூட்டமான அடியார்கள் என்பதாகும். (குப்பை - குவியல் கூட்டம்) அடியாரையே ஆண்டவராகக் கருதுவதைச் சைவ சித்தாந்தம் வற்புறுத்தும்.

இப்பாடலின் சாயலை மணிவாசகரிடமும் சுந்தரரிடமும் காணலாம். இம்மையே தரும் சோறும் கூறையும் என்றார். சுந்தரர் அடியேன் உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரிவாய் என்றார் மணிவாசகர்.

பாடல் குறிக்கும் சோறும் துணியும் என்பன உண்ண - உடுக்க என்றதாயினும் அவை உடலுக்கானவை, ஆனால் அடியாரை வணங்கலால் பெறும் பயனாகக் கூறிய வினை இறக்கம் என்பது உயிர்க்கானதாகும்.

இந்த இம்மை மறுமைப் பேறுகளை ஒருசேரப் பெற்றுய்யும் இடமாக உள்ளது தில்லைப்பதி என்பதால் தான் பட்டினத்தார் நிருத்தம் கண்டால் என்றார். கண்டபோதே என்பது கருத்து.

அதாவது - காணாமல் போனால் இம்மை மறுமைப் பயன்பெற முடியாது என்ற எதிர்மறைக் கருத்தைத் தருவதாய்ப் பாடப்பட்டதாக இல்லாமல் காணும் உறுதிப்பாட்டைச் சுட்டுவதாகவே கண்டால் (கண்டபோதே) எனப்பட்டது. இதில் மறுதலையான கருத்துக்கு இடமே இல்லை. இதனை வேறோர் இலக்கியச் சான்றால் உறுதிப்படுத்தலாம்.

*வருவார் அழைத்து வாடி-வடலூர் வடதிசைக்கே வந்தால் பெறலாமட் நல்ல வரமே!*

எனப் பல்லவியாக எடுத்துப்பாடிய இசைப் பாடலில் இராமலிங்க வள்ளலார்.

*மெல்லியல் சிவகாம வல்லியுடன் களித்து*
*விளையாடவும் எங்கள் வினை ஓடவும் ஒளித்து*
*எல்லையில் இன்பந்தரவும் நல்ல சமயம் தானிது*
*இங்குமங்கும் நடமாடி இருக்கலாம் என்றபோது,*

எனச் சரணமாகப் பாடல் ஒன்றைப் பாடியுள்ளனர்.

இப்பாடலில் வந்தால் பெறலாம் என்பது வராவிட்டால் பெற முடியாது என்பதாக இல்லாமல் வந்து கைம்மேல் பலன்பெறு என்ற உடன்பாட்டை உறுதிப் படுத்துவதாகவே ஆன்மாவுக்கு அறிவுரை பகர்வது போல் பட்டினத்தார் நிருத்தம் கண்டால் என்பதைக் கண்டவுடனே இம்மை மறுமைப் பயன்கள் கிட்டிவிடும் என்பதாகக் கூறப்பட்டதை வடலூரார் பாடற் பொருளுடன் பொருத்தி உணரலாம்.

இக்கருத்தாடலை வேறொரு வகையாலும் உணரலாம். சூரியன் வந்தால் இருள் மடியும் எனும் போது சூரியன் வராவிட்டால் என்ற எண்ணத்திற்கே ஈண்டு இடமில்லை. ஏனெனில் சூரியன் வராமல் இருப்பவன் அல்லன், வந்து கொண்டே இருக்கும். இயற்கையன் என்பதால் வராவிட்டால் எனச் சிந்திக்க இடம் இல்லை, இவ்வாறே ஈண்டு அன்பர்கள் நிருத்தத்தைக் காணாமல் இருக்கப் போவதில்லை கண்டவண்ணமாகவே இருப்பதால் கண்டபோதே இம்மை மறுமைப் பயன்கள் உடனே கிட்டிவிடும் என்பதாய் உறுதியுடன் கூறப்பட்டதாக உணர வேண்டும்.

அதனால் தான் பட்டினத்தாரைப் போலவே அதாவது நிருத்தம் கண்டால் வினை இறங்கும் என்பது போல வள்ளலாரும் நடராசர், சிவகாமியம்மையுடன் விளையாட ஆன்மாக்களின் வினை ஓடி ஒளியும் என்றார்.

எனவே இப்பாடல் மூலம் பட்டினத்தார் தில்லையை ஒவ்வொருவரும் கண்டு தரிசிக்க வேண்டும் என வற்புறுத்தினார் எனலாம். இதன் தொடர்ச்சியாகக் கூறுவதை அடுத்துக் காண்போமாக!

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### அட்டமாசித்தி உபதேசித்தது

முன்னொரு காலத்தில் திருக்கயிலாயத்திலே கல்லால மரத்தின் கீழே சிவபெருமான் அமர்ந்திருந்தார். அருகே இருந்த உமா தேவியார் தமது திவ்வியக் கரங்களாலே வெற்றிலைச் சுருளை மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். அன்பும் அருளும் பெருகிய போககுரு மூர்த்தியான சிவபெருமான் அண்டியிருந்த சிவகணத் தலைவர்கட்கும் சனகாதி முனிவர்கட்கும் அமுத நல்லுரைகளை வழங்கிக் கொண்டிருந்தார். அந்தப் புனிதமான சூழ்நிலையிலே முருகப் பெருமானுக்குப் பாலூட்டிய கார்த்திகைப் பெண்களான யக்ஷமாதர் ஆறுபேர்களும் சிவ சின்னங்கள் துலங்கச் சிவபெருமான் திரு முன்னர் வந்து பணிந்து நின்றனர். பின்னர் பெருமானின் சேவடி வணங்கி, கருணைக்கடலான எந்தையீர் ! எளியவர்களாகிய எங்களுக்கு அஷ்டமாசித்தியை உபதேசித்தருள வேண்டும் என்று விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

கைலாசபதி தமது இடம் கொண்ட உமா தேவியாரைச் சுட்டிக்காட்டி விட்டு, உமாதேவியே பராசக்தி மகேஸ்வரி, அணிமா முதலான அஷ்டமா சித்திகளும் பணிப் பெண்களாகத் தன்னைச் சுற்றிலும் குற்றேவல் புரிய அமர்ந்திருப்பவள். ஆதலால், உமா தேவியை நீங்கள் உள்ளத்தில் இருத்தித் தியானம் செய்தால் உங்கள் வினைகளைப் போக்கி அஷ்டமா சித்திகளையும் தந்தருளுவாள் என்று திருவாய் மலர்ந்தருளினார். பின்னர் அஷ்டமாசித்திகளையும் யக்ஷமாதர் அறுவருக்கும் உபதேசித்தருளினார் அவர்கள் அறுவரும் உமாதேவியாரைத் தியானிக்காது இருந்து விட்டதனால் உபதேசத்தையே மறந்துவிட்டனர். சிவபெருமான் அறுவரது குற்றத்தையும் மன்னிக்க முடியாதபடி கோபம் கொண்டார். நீங்கள் அறுவரும் பட்டமங்கை என்னும் ஸ்தலத்திலுள்ள ஆலமரத்தின் கீழே கற்பாறையாய்க் கிடக்கக் கடவீர்கள் என்று சாபம் கொடுத்தார். சாபம் பெற்ற அறுவரும் மனக்கவலை மிகுந்தவர்களாகி விமோசனம் எப்படிக் கிடைக்குமோ? என்று ஏக்கத்தோடு கேட்டனர். ஆயிரம் ஆண்டுகள் பாறையாகக் கிடக்க வேண்டும். அப்பால்யாம் மதுரையிலிருந்து அங்கே வந்து உங்களது சாபத்தைப் போக்குவோம்; உங்களுடைய பழைய வடிவத்தையும் ஈந்து அஷ்டமாசித்திகளையும் விளக்கிக் காட்டுவோம் என்று மாற்றுரை மொழிந்தார்.

யக்ஷமாதர் அறுவரும் பட்டமங்கை ஸ்தலத்திலிருந்த ஆலமரத்தடியிலே கற்பாறையாகிக் கிடந்தனர். ஆயிரம் ஆண்டுகளும் கழிந்தன. எண்குணம் தங்கிய ஒரு பெருந் தலைவனாகிய சிவபெருமான் தனது இச்சையினால் ஞானாசார்ய வடிவம் கொண்டார். கற்பாறையாகக் கிடக்கும் கார்த்திகைப் பெண்கள் அறுவரின் முன்பு வந்து தோன்றினார். அவர்களது வினை கெடுமாறு திருப்பார்வை செய்தருளினார். உடனே கிருபாகடாக்ஷம் பெற்ற அறுவரும் பாறை உருவம் நீங்கப் பெற்றவர்களாகித் தங்கள் சுய ரூபத்தை அடைந்தனர். அறுவரும் பக்தி பெருகச் சிவபெருமான் திருவடியிலே வீழ்ந்து வணங்கினர். பின்பு சிவபெருமான் பெருங்கருணை கொண்டு அவர்கள் சிரங்களின் மீது தமது திருக்கரத்தை வைத்து அஷ்டமாசித்திகளையும் தெள்ளத் தெளிய உபதேசித்தருளினார்.

அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசத்வம், வசித்வம்என சித்திகள் எட்டு வகைப்படும். இவை அனைத்தும் ஒப்பற்ற மெய் ஞானிகளின் விளையாட்டின் வகைகளாகும். பரமாணுவாய்த் தங்கும் தன்மையே அணிமா. எங்கும் நிறைந்திருக்கும் பெருமையே மகிமா. பாரமற்று இருப்பது லகிமா. கனமுற்று இருப்பது கரிமா. எல்லா உலகும் சென்று வரும் தன்மை பிராப்தி. வேறு உடம்புக்குள் புகுதல், வான சஞ்சாரம் செய்தல், நினைத்த இடத்திலே நினைந்தபடி செய்தல் பிராகாம்யம், உலகப் பொருள்களனைத்தையும், மூன்று காலங்களையும், வானுலகப் பொருள்களைத் தன் உடலிலே உள்ள ஒளியால் விளங்கச் செய்தல், இருந்த இடத்தில் உள்ளவாறே அனைத்தும் அறிதல் பிராகாம்யம், சிவபெருமானை நிகர்த்து முத்தொழில்களும் செய்து நவக்கிரகங்களையும் தன்கட்டளைக் கிணங்கச் செய்வது சத்வம். எல்லாவகை உயிர்களையும், இந்திராதி திக்குபாலகர்களைத் தன்வசமாகச் செய்து கொள்வது வசித்வம். ஆனால், எம்மையறிந்த சிவஞான யோகியார்கள் இந்தச் சித்திகளை விரும்பமாட்டார்கள். இருந்தபோதும் இச் சித்திகள் யோகியர்களின் பெருமையை உலகிற்கு உணர்த்தும் பாங்குடையன என்று திருவாய் மொழிந்தருளினார் யோகராஜாவான சிவபெருமான்.

சிவபெருமான் தெளிவாக உபதேசம் செய்தருளிய அஷ்டமாசித்திகளையும் யக்ஷமாதர் ஆறுபேர்களும் உமா தேவியாரின் தியானத்தின் மகிமையாலே நன்றாகப் பயின்றனர். பிறகு ஆகாச மார்க்கமாகச் சென்று கைலாச மலையை அடைந்தனர்.

*(தொடரும்...)*

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

கோவிலூர் – காரைக்குடி – 630 307.

தொலைபேசி : 04565 - 234 523 கைபேசி : 94435 02017

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**2019 - 2020 ஆம் கல்வி ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது.**

Thirumagal
04565 - 232991